25th January 1961]

*Examinations*

*195 Q.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether there is any proposal to make suitable changes in the present system of examinations in view of the recommendations made in the report on the present system of examinations drawn up by the Committee of Educationists at the instance of the University Grants Commission; and

(b) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) No, Sir.

(b) Does not arise.

SRI N. K. PALANISAMI: ஸார், இந்தக் கமிட்டியானது, வருஷக் கடைசியில் பரீட்சை வைத்து கொடுக்கப்படும் தேர்வு முறைக்குப் பதிலாக, ஒரு மாணவர் வருஷ முழுதும் எடுக்கும் மார்க்குகளை வைத்து தேர்வு முறை இருக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: என்னிடம் இருக்கும் தகவல்படி, அந்தக் கமிட்டி ரிபோர்ட்டை இன்னும் முடிவு செய்ய வில்லை என்று தெரிகிறது. அங்கத்தினர் எப்படி அவர்கள் சிபாரிசைக் கண்டு பிடித்தார் என்று சொல்ல முடியவில்லை.

SRI N. K. PALANISAMI: எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் இந்த வருஷம் 52 சத விகிதம் பெயில்யூர் ஆக இருக்கிறது. கிட்டத் தட்டச் சில கேஸ்களில் ஒரு மார்க்கு, இரண்டு மார்க்கு குறைவுக்காக பல மாணவர்கள் பெயில் ஆகியிருக்கிறார்கள். அம்மாதிரி கேஸ்களுக்கு இரண்டாவது ஸிஸ்டு கொடுக்க உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: மூலக் கேள்வி யுனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் பற்றியது. இப்பொழுது அங்கத்தினர் கேட்கும் கேள்விக்கும் அதற்கும் சம்மந்தம் இல்லை.

*History of Tamil Nad*

*196 Q.—SRI M. P. SARATHI: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ் நாட்டின் சரிதத்தை சரியாக ஆராய்ந்து தயாரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளதா?

(இ) அப்படியாயின், விவரமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI S. M. ANNAMALAI: இப்பொழுது இருக்கிற சரித்திர வரலாற்றில், வீர பாண்டிய கட்டபொம்மன் போன்ற வீரர்களின்